31st March 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : மதிப்பு சரியா, நியாயமா என்பதை "Land Acquisition Act" பிரகாரம் கலெக்டர் தீர்மானிக்கிறார்கள். அது அவர்களுக்குப் பிடித்தமாகயில்லை என்று சொன்னால், அதன்மேல் அப்பீல் போடுவதற்கு வழியிருக்கிறது. ஆகவே அதற்குத் தடை செய்வது அவ்வளவு சரியல்ல என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : 1947-க்குப் பிறகு புதிதாக வீடுகள் பழுது பார்க்கப்பட்டாலும், கிணறுகள் மராமத்து செய்யப்பட்டாலும் அவைகளுக்கு காம்பென்சேஷன் கொடுக்காதது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அவைகளுக்கும் கொடுக்க அரசாங்கம் உத்திரவிடுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1947-க்குப் பிறகு "Agricultural improvements" செய்யப்பட்டிருந்தால் அதற்குக் காம்பென்ஸேஷன் கொடுக்கப்படும். ஆனால் வேறு improvements செய்திருந்தால் கொடுக்கவேண்டியதில்லை என்று சட்டமிருக்கிறது.

SRI V. SUBBIAH : இப்பொழுது இருக்கக்கூடிய கோர்ட் பீஸ் கட்டணம் அதிகமாயிருப்பதன் காரணமாக, ஒரு எக்கர் நிலம் ரூபாய் 2,000 ஆக மதிப்பு இருந்தாலும், 1,000 அல்லது 500 என்று கிரயம் போட்டு எழுதுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதன் மதிப்பீட்டை வைத்து "Land Acquisition Act" பிரகாரம் கொடுப்பதாய் இருந்தால், அது எவ்வளவு தூரம் அவர்களை பாதிக்கும் என்று கனம் மந்திரி அவர்கள் சொல்லுவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவ்வாறு குறைவாக மதிப்பைப் போட்டு பத்திரங்கள் எழுதுவது சட்டத்திற்கு விரோதமானது. குற்றமும் கூட. அவ்வாறு எழுதியிருக்கிறார்கள் என்றால் கலெக்டரிடத்தில் எடுத்துச் சொல்லலாம்.

MR. SPEAKER : கேள்விகள் 474, 475, 476 மூன்றும் நெய்வேலித் திட்டத்தைப்பற்றியிருப்பதால் அவைகளை ஒன்றாக எடுத்துக்கொள்ளலாமென்று நினைக்கிறேன். அங்கத்தினர்கள் அந்த மூன்று கேள்விகளின் பேரிலும் உப கேள்விகள் போடலாம்.

* 474 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have ordered the eviction of the owners of shops and houses in the vicinity of the Neyveli Railway Station?

THE HON. SRI R. VENKATARAMAN : The lands in the vicinity of the Neyveli Railway Station have been acquired for the Neyveli Lignite Corporation (Private) Limited, Neyveli. As the owners of houses and shops in this area refused to hand over possession, action has been taken by the Special Tahsildar under section 47 of the Land Acquisition Act to enforce surender of possession of the lands.

Sir, are supplementaries to be answered or shall I read the main answers ?

MR. SPEAKER : You can read the written answers.

SRI K. VINAYAKAM : It would be convenient if supplementaries are answered separately for each question, Sir.

THE HON. SRI R. VENKATARAMAN : It is convenient to answer supplementaries for each question.

MR. SPEAKER : I have no objection.

[31st March 1958

SRI A. GOVINDASAMY : நெய்வேலி ரெயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் உள்ள கடைகளையும் வீடுகளையும் இப்பொழுது அப்புறப் படுத்தவேண்டிய அவசியம் கிடையாது. இந்த இடத்தில் சுரங்கம் போட வேண்டிய அவசியம் இல்லை. வேண்டுமென்றே, அப்புறப்படுத்த வேண்டு மென்ற எண்ணத்தோடு, அங்கேயுள்ள ரெவின்யூ அதிகாரிகள் தொல்லை கொடுப்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்வது சரியல்ல. அந்த இடத்தில்தான் ரெயில்வே ஸைடிங் போட்டு, நமக்கு வேண்டிய எண்ணை, இன்னும் பலவிதமான சரக்குகள், அதாவது இரும்பு, ஸ்டீல் போன்ற சாமான்களையெல்லாம் ஸ்டோர் செய்யவேண்டி யிருக்கிறது என்று லிக்னைட் கார்ப்பொரேஷன் சொல்லுகிறார்கள். அதற் காகத்தான் அந்த இடத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்லி யிருக்கிறார்கள்.

SRI T. SAMPATH : எந்தக் காரணத்தால் சுவாதீனம் கொடுக்க மறுக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த இடத்தில் நிலம் வைத்துக்கொண்டால் லாபம் ஜாஸ்தி. இரண்டாவதாக அதிகமான காம்பன் ஸேஷன் கிடைக்குமென்று நினைக்கிறார்கள்.

SRI A. GOVINDASAMY : அப்புறப்படுத்தப்படுகின்ற வீடுகள், கடைகளுக்கு அருகேதான் அதிகாரிகளின் வீடுகளும் இருக்கின்றன என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தெரியாது.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to house the evicted persons in a new township and what is the stage in the construction of a new township?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. Every evicted person is under the present arrangement given land to the extent of two acres in other areas set apart for them ; representations have been made by some of these shop-keepers that they should be given sites in the proposed Neyveli Lignite Corporation area. The only snag in this is if the local people want to form co-operative societies and run the shop, it may not be possible to accommodate these private shop-keepers.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது அப்புறப்படுத்தப்பட் டிருக்கிற கடைக்காரர்களுக்கு அங்கே டவுன்ஷிப் உண்டாக்குகிற நேரத்தில் கடைகள் வைக்க உரிமை கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதைத்தான் இப்பொழுது சொன்னேன். அந்தக் கடைக்காரர்கள் இடம் கொடுக்கவேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். சாதாரணமாக அவர்களுக்குத்தான் "பிரிபெரன்ஸ்" கொடுக்கவேண்டும். ஆனால் டவுன்ஷிப் ஆரம்பித்த பிறகு அங்கு இருக் கிறவர்கள் கூட்டுறவு சொஸைட்டிகள் கடைகள் வைத்துக்கொள்ளவேண்டு மென்று சொன்னால், கூட்டுறவு இயக்கத்திற்கு அதிக ஆதரவு கொடுக்க வேண்டும் என்ற காரணத்திற்காக அவர்களுக்குக் கொடுக்க முடியாமல் போகலாமென்று நினைக்கிறேன்.

8-40 a.m. SRI K. VINAYAKAM : Sir, if it is proposed to acquire shops and houses in the vicinity of the railway station on the pretext that there is lignite underground, is there any proposal before the

31st March 1958]

Government to acquire the very site on which the railway station stands where it is also logically concluded that lignite may be available underground ?

THE HON. SRI R. VENKATARAMAN : I regret the poor information of the hon. Member. It is not for the purpose of mining lignite that this particular piece of land is sought to be acquired. It is for building godowns, store-houses for petrol, diesel oil and iron and steel materials and so on. The railway station is absolutely necessary for carrying these things to those places.

SRI S. LAZAR : நெய்வேலியில் பல தொழில்களை நிறுவுவதற்கு சர்க்கார் முயற்சிக்கும்போது நடைமுறையில் பல கஷ்டங்கள் இருக்கக்கூடும். இப்போது கேள்விகள் கேட்கப்படுவதிலிருந்து ஒரு சந்தேகம் எழுகிறது. இந்தக் காரியங்கள் வெற்றியடைவதற்கு எதிர் கட்சிக்காரர்கள் ஒத்துழைக்க விரும்புகிறார்களா இல்லையா என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

MR. SPEAKER : How does this question arise out of the main question?

SRI M. SELVARAJ : இப்பகுதியிலிருந்து வெளியேற்றப் பட்டிருப்பவர்கள் கோர்ட்டில் ஒரு ரிட் தாக்கல் செய்திருப்பது கனம் மந்திரி அவர்களுக்குத் தெரியுமா ? இதில் ஒரு முடிவு ஏற்படும் வரை இந்த வீடு கட்டிக் கொண்டிருப்பவர்கள் தொடர்ந்து நீடித்து இருப்பதற்கு அரசாங்கம் அனுமதி அளிப்பார்களா ?

MR. SPEAKER : Is the matter before the Court?

THE HON. SRI R. VENKATARAMAN : There is one writ petition filed by some persons asking for the stay of acquisition proceedings. இது 1954-ம் வருஷம் கட்டப்பட்ட வீடுகள். 1953-ம் வருஷம் இயற்றி விட்ட சட்டத்தின்படி எந்தவிதமான 'இம்ப்ரூவ்மெண்ட்' செய்தாலும் நஷ்ட ஈடு கிடைக்காது. நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் நாட்டுக்கு மிகவும் அவசியம் என்பதை கனம் அங்கத்தினர்கள் உணர்ந்து அவர்களுக்கு இருக்கும் 'இன்புளுயன்ஸ்' ஐ வைத்துக் கொண்டு அங்கு இருப்பவர்களை வேறு இடத்திற்கு போகச் சொன்னால் இந்த திட்டம் சீக்கிரம் நிறைவேறும்.

* 475 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the amount of compensation per acre paid to the agriculturists evicted from the Neyveli area ; and

(*b*) the basis on which the compensation is determined?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The answer[a] is placed on the table of the House.

SRI M. SELVARAJ : சார், இப்போது கொடுக்கப்படுகிற 'காம்பென்சேஷன்' பிளாக் வாரியாக பிரித்துக் கொடுக்கப்படுகிறது. அதாவது ஒருவருக்கு 2 ஏகர் நிலம் இருந்தால், ஒரு ஏகரை ஒரு பிளாக்காகப் பிரித்து அதிக விலையும், மற்றொரு ஏகரை வேறொரு பிளாக்காக பிரித்து குறைந்த விலையும் கொடுக்கப்படுகிறது. இந்த பிளாக் முறையில் விலை நிர்ணயம் செய்யாமல் ஒரே தரமுள்ள நிலங்களுக்கு ஒரே விலை கொடுக்க சர்க்கார் உத்திரவு போடுவார்களா ?

---

[a] Printed as Appendix II on pages 374–375 infra.